உ

ஓம் சரவணபவ

# ஸ்ரீ முருகன் புகழ் மாலை

மலர்: 16



27-10-87

அன்பளிப்பு :

சாமி பிரிண்டர்ஸ்

6, மேக்லின் தெரு, சென்னை-600 001.

பிரபவ ஷு ஐப்பசி மாதம் 10-ம் தேதி

உ

முருகன் துணை.

## நினைவு மலர்

அன்புடையீர்,

சென்னை பூங்கா நகர், தங்கசாலை தெரு, நெ. 241-ம், இல்லத்தில் வசித்து வந்த எஃது பெற்ருேர், காலஞ்சென்ற பெரிஞ்சம் பாக்கம் குப்புசாமி செட்டியார் அவர்களின் நினைவாகவும் அவரது துணைவியார் திருமதி நீலாம்பாள் அம்மாள் அவர்களின் நினைவாகவும், சென்னை கந்தசாமி கோயிலென வழங்கும் ஸ்ரீ முத்துக்குமாரசாமி தேவஸ்தானத்தின் 60-வது வருடத்திய பிரபவ வருஷம் ஐப்பசித் திங்கள் 10உ (27—10—87) கந்த சஷ்டி கோடியர்ச்சனை வைபவத்தின் போது இலவச வெளியிடும் மலர்.

பெயரன்கள்

P. M. சேகர்

P. M. ரவிகுமார்

மகன்

P. முத்துகுமாரசாமி

Prop: SWAMY Printers.

ஓம் சரவணபவ

நெஞ்சம் உருகி தஞ்சம் என்று அடைந்து தன்னை அர்ப்பணிப்பவரை, என்றும் இளமையுடன் இருக்கும் ஞான குருவானகுமரன் அஞ்சலென அடைக்கலமளித்து தன்னை நாடியவரை மன அழுக்காற்றைப் போக்கி இன்னல்களைக் களைந்து இன்ப வாழ்வை அளிப்பவன். வேல்கொண்டு வினைகளைத்தீர்ப்பவன். அவனுடைய கழல்களில் தன்னை அர்ப்பணித்து அவனது சேவையையே தனது முதற் கடமை என்று இம்மலரை இலவசவெளியீடாக அளிக்கும் P. முத்துகுமாரசாமி (சாமி அச்சக உரிமையாளர்) அவர்கள், முருகனின் சேவையை தொடர்ந்து செய்ய நீண்ட ஆயுளையும், துன்பமற்று அமைதியான வாழ்வையும் அளிக்கும்படி அக் கந்தனின் கழல்களைப் பணிவோமாக.

இப்படிக்கு
முருகனன்பன்
ம. ரா. பத்மநாபன்

ஓம்
சிவமயம்

# குமர கிரி கவசம்

## கணபதி காப்பு

காலமெலாம் பாலனவன் கணேசன் திருவுடையோன்
சூல மொடு ஐம்முகத்தோன் சுரனோடு நான்முகனும்
சீல மிகு திருமாலும் தேடிவரும் கரிமுகத்தோன்
மூலவினை மலைநீக்கி முழுச் செல்வமருள் புரிவான்
குமரன் குன்றினில் இருக்கும் குமரனை யான்பாட
குறைகள் ஒன்றும் வாராமல் குணக் கணபதியே அருள்வாய்.

## முருகர் காப்பு

எப்பொழுதும் வாடார் எதிலுடன் இருப்பார்
எக்காலமும் புகழ்ப் பெறுவர்-இத்தரணியில்
எம்கோன் குமரன் குன்றினில் இருக்கும்
எம் தந்தையைப் போற்றி உய்வார்க்கு.

அரனிடம் அளவில்லா வரம் பெற்ற சூரபத்மனின்
கொடுமைதனை ஒழிக்க தேவர்கள் எல்லாம்
சிவசக்தியைத் தேடி நாடி வேண்ட, அம்மை அப்பரும்
அருள் கூர்ந்து, ஓர் குமரன் அவதரிப்பான் எனச்
சக்தியும் சிவமும் சேர்ந்தோர்நாள் அர்த்தநாரி ஆகி
ஐந்து முகத்துடன் அதோமுகமும் சேர்ந்து ஆறுமுகமாகி
அவ்ஆறுமுகவிழியில் ஆறுதீப்பொறி வெளிவர,
அதனைச் சரவணப்போய்கைதனிலிட-அவை
மூவிரண்டு உருவாகித் தவிழ அக்குழவி
கார்த்திகைப் பெண்களால் வளர்ந்து ஓங்கி
ஓடிவிளையாடி மகிழ்ந்திருக்கும் நேரத்தில்
சக்தியும் சிவமும் இடைதனில் வந்து
அவ்வுருவம் ஆறினையும் அணைத்து அகமகிழ்ந்து
ஓர் உருவாக்கி இடைதனில் இருத்தி,

கந்தன்என பெயர்சூட்டி மகிழ, குமரனும்
நவவீரருடன் அந்த மாதனத்தில் களிப்புடன் இருந்தான்
அச்சமயம் அரனை வழிபட அயன் செல்ல,
கந்தனைக் கண்டும் காணுதவராகச் செல்ல,
அவ் அயனை அழைத்து உமது தொழில் யாது? என
யாம் பிரம்மம் என மொழிந்து-மற்றும்
படைப்புத் தொழில் என்று கூற-அதன்
மூல மந்திரம் யாது என வினவ,
ஓம் என்று சொல்ல, அதன் தத்துவம் யாது என
அயனும் விடை அளிக்காமல் விழிக்க,
அவ் அயனைக் குட்டிச் சிறை இருத்திய கோமான்
தானே சிவன் அயன்மால் என ஆகி.
சிருட்டித் தொழிலுடன், ஆக்கல், அழித்தல், காத்தலும்,
முத்தொழிலுக்கும், முத்தமிழுக்கும் முதல்வன் ஆயினன்,
இதனை அறிந்த சிவ-சக்தி வந்து அயனை விடுவித்து,
ஓம் என்ற சொல்லுக்கு [illegible] என

சொல்லை, நீர் சீடனுக்கவும் யாம் குருவாகவும்,
சொல்லுவோம் எனச்சொல்லி-அதற்குப்
பொருள் உரைத்து, சாமிக்கு சாமிநாதனானர்,
சிவசக்தி குமரனை அழைத்து அருள்விழி நோக்கி,
இருத்தி, அந்தகர்கள் செய்யும் அநியாயம் ஒழிக்க,
உலகமக்கள் குறைதீரக் காரணமாய் உதித்த,
கந்தா முருகா! அருகில் வருகவென அழைத்த,
அருட் சக்தியிடம் சீர்காழி வீரவேல் பெற்று,
தானைகளுடனே தடம்தோள் திருமுருகன், ௫
திருச்செந்தூரிலே இளைப்பாறிய குமரன்,
தம்பி வீரவாகுவை சூரனிடம் தூது அனுப்ப,
சூரபத்மனும் தேவர்களை விடுவிக்க இசையாததலால்,
திருக்குமரன் வெகுண்டு எழுந்து-போர்முனையிலே,
மாயா வித்தாரகனையும் மாயக் கிரியையும்
ஆயிரம் சிரமும், இரண்டாயிரம் கரங்களுமுடைய
சிங்கமுகா சூரனையும் வென்று-அனந்த

கோடி அவுணர்களையும் அழித்து
சக்திவேலால் சூரபத்மனின் மாயமெலாம் ஒழித்து,
வெற்றிவேலால் பலவித சரமது-பின்
வீரவேலால் மாய மாமரத்தினை இருகூறுக்கி.
அவ்விரு உடல், சேவலும் மயிலுமாய் எதிர்த்துவர,
சேவலைக் கொடியாக்கி, மயிலை ஊர்தியாக்கி,
மயில்மேல் அமர்ந்து தேவர்கள் சிறை மீட்ட,
செல்வக்குமரா! தீராதிதீரா, தீனதயாளா சரணம்,
சூராதி சூரா! சூரசம்மாரா! சரணம், சரணம்,
வீராதி வீரா! வேல் அலங்காரா! சரணம் சரணம்,
தேவாதி தேவா தெய்வயானை மணவாளா சரணம்,
வல்லவர்க்கு வல்லவா வள்ளி மணவாளா சரணம்,
எளியார்க்கு நல்ல எழில் அலங்காரா சரணம்,
சண்டப் பிரசண்ட சத்ரு சம்மாரா வருக வருக
கலகலவென எம்கருணையே வருக வருக,
சலசலவென சடுதியில் வருக வருக,

நான்கு வேத கீதனே வருக வருக
நான்கு கவிக்கு அரசே நலமே வருக வருக,
முத்தமிழுக்கும் முதலே வருக வருக,
ரங்கநாதரின் முத்துக் குமரா-வருக வருக
ஆறு சிரம் கொண்ட அலங்காரா வருக வருக
அருள் நிறைந்த அன்பு ஜோதிச் சுடரே
நா மூன்று கண்ணும் நல்வளச் செவ்வாயும்,
ஈராறு காதினில் கவசக் குண்டலமும்,
செங்கதிர் ஒளியும் திருமேனியின் அழகும்
கஸ்தூரி சந்தணம் கமுகின் மணமும்,
திருநீற்று அழகும் திருச்செந்தூர் எழிலும்
ஈராறு கரம் அதில் ஈடில்லா ஆயுதமும்,
கோழிக் கொடியும் எம்கோமான் அழகும்
அருட்கையும் திருவருள் பார்வையும்,
திருக் கையில் வேலும் தீவிரப் பார்வையும்,
ருத்திராக்ஷ மாலையும் உடன் சங்கு மணியும்,
கனமணித் தாவடமும் கனத்த ஆரமும்,
மார்பில் நல் மகர கண்டிகையும்,
புயபலக் கீர்த்தியும் புன்சிரிப்பு அழகும்
அழகிய வதனமும் அகண்ட மார்பும்,
சிற்றிடை அதனில் சிறந்த பீதாம்பரமும்,

பட்டுடைச் சொலிப்பும் பள பள வென,
பகலவன் சுடர்போல் சரவண பவன்,
இடையில் குஞ்சம் இருபுறம் அசைய
காலில் சிலம்பொலி கல கல என
பாதக் குறடு பாதத்தில் இலங்கப்
புனிதனே நின்பாதம் பற்றினேன்
புகழ்ந்து உனைப்பாடி புகழ்மாலை சூடிட,
தகுதிமி தகுதிமி தகுதாம் திரிகிட என
தத்தித் தித்தோம் என தாளங்கள் ஒலிக்கத்,
தாண்டவம் ஆடி சதுர் மறையோர்கள்
முப்பத்து முக்கோடி தேவர்கள் மகிழ்ந்திட, ௰
சிலம்பத்தின் ஓசை ஜெய ஜெய வென்றிட
டம டம டமடம என தவில் முரசொலிக்க,
பூம் பூம் பூம்பூம் என கொம்புகள் ஊதிட,
பம்பை உடுகைப் பலப்பல வாத்தியம்,
சரணம் சரணம் சரணம் எனத்
தொண்டர்கள் எல்லாம் சூழ்ந்து உன்புகழ் பாட,
வேடிக்கை விருப்புடன் காவடிகள் ஆடிட
மச்சக் காவடி, மரகதக் காவடி, முத்துக் காவடி,
பால்காவடி, பழக்காவடி, மலர்க் காவடிகள் ஆடிட,
தம் தம் தம்தம் என பம்பைகள் ஒலிக்க,

கிணிங் கிணிங் என மணிஓசை ஒலிக்க,
டண் டண் டண்டண் என தாளங்கள் ஒலிக்க,
பும் பும் பும்பும் என சங்குகள் ஊதிட,
பிரம்ம தாளம் தளாங் தளாங் தளாங் என,
சரணம் சரணம் சரணம் என சரணமடைந்தேன்,
எப்பிறவியிலும் உனையே துதிக்க அருள்வாய்,
சரவணபவா, சண்முகா, குமரா சரணம்
வெண் சாமரம் நின் இருபுறமும் வீசிட,
வேடிக்கை விருந்துடன் அடியார்கள் கூடிட,
மல்லிகை முல்லை மலர்மாலை அசைந்திட,
கடப்பமாலை கமுகு கம கம கமகம என,
வலக் கரத்தில்,அருள்வடிவேல் இலங்கிட,
நவவீரர்கள் புடைசூழ்ந்து வந்திட,
நான்கு வேத கீதத்தலைவா வருக வருக,
சரணம் சரணம் குமரா, குருபரா சரணம்,
வடிவேல் அரசே வக்கிரமம் அது நீங்கிட,
மாற்றார் வஞ்சகர், வஞ்சமது நீங்கிட,
வதன சிங்காரா! மயில் அலங்காரா!
எம் உயிர்க்கு அரசே! இறைவா சரணம்!
குன்றம் வந்தோர்கள் இளமை குன்றாமல் இருக்க,

குன்றத்து அமர்ந்த குமரா குகா அருள்வாய்,
குன்றம் வந்தவர்கள் குறைகள் தீர்ந்து,
வாக்கிலும் மனத்திலும் நோக்கிலும் இருந்து
சகல சூன்யம் சண்டாளங்களும்-
ஏவல் மந்திரம் தந்திரம் எதுவானாலும்,
வைப்பும், இடும் மருந்துகளும் கண்ணேறும்,
கடும் வார்த்தைகளும்-தமியேனை
எதிர்த்திடும், தகாதவர்கள் விரோதமும்,
குன்றம் அமர்ந்த குமரா காக்க காக்க,
விண்ணினாலும் மண்ணினாலும் பிலந்தினாலும்,
நீரினாலும் நெருப்பினாலும் ஊர்தியினாலும்-மற்றும்
நடப்பன ஊர்வன விலங்குகளாலும் எனக்கு
எவ்விதமான விஷக்கடியாலும்-மற்றும்
வாதம் பித்தம் மேக ரோகங்கள்
பலப்பல நோய்களும் பக்கப் பிளவும்
முடியாத் துயர்களும் குமரா முருகா என்றால்,
எவ்இடரும் ஒட்டிய இறைவா அருள்வாய்,
வேல் வேல் என்றிட வினைகள் மாய்ந்திட,
முன்பின்செய்த, தீவினைகள் ஓடிய
குமராயென திருவெண்ணீறு அணிந்தால், முருகா
தீயது தீய்ந்தோடிட அருள்வாய்,

எவ்வியாதியும், எவ்விடரானாலும்-சத்தியமாக
குமரா குகா சரவணா என்றால்-அவை
சரணமடைந்து ஓடிடச் செய்வாய் குமரா!
கேடுகள் ஒழித்து கேட்ட வரமும் தந்தருள்வாய்,
இதுமட்டுமல்ல இன்பமுருகா போற்றி
சடாமுனியின் சண்டித்தனமும் அடங்கா முனியின்
அட்டகாசங்களும் பேய் உச்சிக் காட்டேரி பிசாசு,
பூதங்களும் கொள்ளிவாய் பேயும் கொலையான உயிரும்,
ஏமசாமம், காலைமாலை சந்தியிலும் முருகா
வழிமறிக்காமல் வாய்விட்டு அலறிடாமல் முருகா
பயத்தினால் வாய்குழறி உன் நினைவு இழந்தாலும்
முருகா குமரா குகாஎனச் சொல்ல மறந்தாலும்,
எமப்பாசம் வந்து எனை அணுகாமல் காக்க,
பாவ வினைகள் எமைத் தொடராமல் காக்க காக்க,
வஞ்சகர் சவோசம் வந்தணுகாமல் காக்க
சேடர் கன்மமெலாம் எமை அனுகாமல்காக்க
பொறாமை பொய்யர்கள் எமை அணுகாமல் காக்க
கள்ளன் குள்ளன் கபடர் எமை அணுகாமல் காக்க
கிராதகர் சூதர் எமை அணுகாமல் காக்க காக்க
நரைதிரை மூப்பு வந்து அணுகாமல் காக்க காக்க
கூன் குருடு பிணிகள் எமை அணுகாமல் காக்க

கேடுகள் நினைக்கும் கெடுமதியார்களை
கூர்வடிவேலால் குத்திப் பிளந்து
நிர்தூளி ஆக்கும் நீலவண்ணன் மருகா
குமரன் குன்று அமர்ந்த குமார குருபரா

ஓம் ரீம் ஐயும் கிலியும் ஔவும் சௌவும்
சரவணபவா, சண்முகா, குமரா என்றிட
உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம்
துன்பத் துயர்கள் நீங்கி இன்பமாய் இருக்க
வசிய வசிய சரவணபவா என்றிட
அஷ்டாக்ஷரமும் அனந்த வசியமும்
துர்தேவதை துட்டர்களையும் குமரா நீ
துரத்தி அடித்துக் காத்தருள் குமரா!
நீ எம்மனதில் நிர்மலாய் இருக்க நீ
எமக்கு அருள்வாய் நீலமயில் வாகனு

நோயில்லா வாழ்வும் குறையில்லாத் தேகமும்
கல்வியும் செல்வமும் குறையாது இருக்கக்
குமரன்குன்று அமர்ந்த குமரா அருள்வாய்
சரணம் சரணம் சண்முகா சரணம்
திருபரங்குன்று உறைந்த தேவா சரணம்

திருச்செந்தூர் செம்மலே சரணம் சரணம்
பழனிப்பதி வாழ் பாலதண்டாயுதா சரணம் சரண
சுவாமி மலைவாழ் சுப்ரமண்யா சரணம் சரணம்
தரணிபதி வாழ் தணிகேசா சரணம் சரணம்
பழமுதிர்ச் சோலைப் பவநாசா சரணம் சரணம்

கழுகா சலனே கார்த்திகை மைந்தா சரணம்
தென்கதிர்காமா தெரிசனம் அளிப்பாய் சரணம்
குன்றக்குடி வளர் குமரா குகா சரணம்
கைலங்கிரி கந்தகிரி ரத்தினகிரி சிவகிரி
தோகைமலை கயிலைமலை விருலிமலை மருதமலை
சென்னிமலை சிராமலை ஞானமலை கந்தமலை
கடம்பமலை பன்றிமலை வேங்கடமலை கபிலமலை
குமரமலை தணிகைமலை விராலிமலை சென்னிமலை
விருதாசலம் அருணாசலம் சிவாசலம் கொளஞ்சி
சிக்கல் சீர்காழி எட்டுக்குடி எண்கண்

வயலூர் வேலூர் போரூர் திருக்கோயிலூர்
திருமுருகன்பூண்டி திருச்செங்கோடு மைலம்
இப்படி எண்ணிலாத் தலங்களைப் போலவே சென்னையில்
குமரன் குன்றில் இருக்கும் குமர வேலையும் வணங்கி
தெரிசனம் செய்வோர்க்கு இடரேதும் வாராது

இன்னலேதும் வராது, வராது கழுபிணி
நெருங்காது காலனின் பயம் இருக்காது
குன்று அமர்ந்த குமரன் இருக்க அவன் வேல் இருக்க
சேவல் இருக்க மயில் இருக்க செந்தன் இருந்தாள் நாம்
ஒருதரம் நினைத்தாலே ஓடோடி வருவான் குமரன்
சேவல்கொடியுடன் மாமயில்மீது காட்சிதருவான்
பன்னிரு கண்ணு பரம தயாளா, சண்முகா என்றால்
மடமட என பன்னிரு கையால் அனைத்துப்
பாதமலரைக் காட்டிப் பரிபாலித்து
வடிவேலால் நம்வினைகளை மாய்த்திடுவான்
நாடிநாடி தேடிதேடி வந்தோர்க்கு நலமுண்டாகும்,
நவகிரகத்தால் நன்மைகள் சேர்த்திடும்.
சிவசக்தி வேலவன் செயம் அருளும் வேலவன்,
குமரா முருகா என திருநீறு அணிந்தால்
சரவணபவ சிவ சண்முகன் அருளால்,
சென்மவினைகள் திடுக்கிட்டு ஓடிடும்,
தொல்லைகள் நீங்கி சுகம் அடைந்திடலாம்
குமரா குகா என உள்ளம்உருகி கண்ணருவிகள்
கலகலவெனச் சொரியத் தொழுவோர்க்கு,
எக்காலமும் துன்பமில்லை இன்பம் இன்பம்,
தீர்க்க ஆரோக்யமும் செழுமை அருள்வான்,

அட்டலக்ஷிமியும் ஐஸ்வரியமும் தருவாள்,
கந்தன் அருளாள் கலைவாணி கல்வி அருள்வாள்,
அட்டமா இட்டமா சக்தியும் சேர்ந்து வந்திடும்,
கந்தன் கருணையால் மங்களச் செல்வம்
மனை எல்லாம் பொங்கித் திகழ்ந்திட
நினைத்தது எல்லாம் நித்தம் சித்தியாக,
எமக்கு அருள்வாய் நிமலன் மருகா,
அள்ளிக் கொடுக்கும் வள்ளி மணவாளா,
முத்தி அளிக்கும் தெய்வயானைக் கணவா
தேவாதி தேவா தேடி வந்தவர்க்கு சகாயா,
கச்சியப்பருக்கு கனவில் தோன்றியவா,
கந்தப்ப தேசியர்க்குத் தணிகையில் தோன்றியவா,
இராமலிங்கருக்கு கண்ணாடியில் தெரிந்தவா,
குமரகுருபரருக்கு ஊமையை நீக்கியவா,
அகத்தியருக்கு அழகு தமிழ் ஈந்தவா,
ஔவைக்கு சுட்டபழம் தந்து அருளியவா,
சிதம்பர முனிவருக்குச் சிவகதி தந்தவா,
பாம்பன் சுவாமிக்கு அருகில் நின்றவா,
திரு அருணகிரிக்கு உபதேசம் செய்தவா,
திருப்புகழ் அனுபூதி அலங்காரம் பாடச் செய்தவா,

இப்படி எண்ணற்குஅரியவர்க்கும் குமரா நீ,
இன்னார்க்கு இன்னபடி இன்பம் அளித்தது போல்,
எமக்கும் அருள் தந்தருள்வாய் குமரா! குகா!
இக்குமரன் குன்று அமர்ந்த குமரனை நினைத்து,
குமரகிரி கவசம் இதனை சிந்தனையில்
சிந்திப்போர்க்கு மாயஇருள் போக்கி,
பிறப்பினைப் போக்கி தித்திக்கும் தேமதுரத்
திருவடியும் காட்டி தீயது நீக்கி சக்தியும்,
புத்தியும், ஈரெட்டுச்செல்வமும் ஈந்து அவன் அருளும்
தந்து ஆட்கொள்வான் என சித்தர்களும்
பக்தர்களும் மோன முனிவர்களும் குமரனை
புகழ்ந்து கொண்டாடி எது வேண்டியதும் தந்து
ரட்சிக்கும் குமரன் குன்று அமர்ந்த குமரனை,
அந்தக் குமரவேளை வணங்கி உய்வோம்.



ஆறிரு தடந்தோள் வாழ்க !
அறுமுகம் வாழ்க !
வெற்பைக் கூறுசெய் தனிவேல் வாழ்க !
குக்குடம் வாழ்க !
செவ்வேல் ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க !
மாறிலா வள்ளி வாழ்க!
வாழ்கசீர் அடியார் எல்லாம் !

—(O)—

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவாயு யிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

வேலும் மயிலும் துணை.